னேவனத்தைச்சேர்ந்து நாகசுனையிலே ஸ்நானஞ்செய்தாய் ஆதலால் எமது சாரூபம் உனக்குக் கிடைத்தது. இனி நீ பொன்விமானத்திலேறிக்கொண்டுபோய்த் திருக்கயிலாசமலையைச்சேர்வா' யென்றருளிச்செய்தனர். அவனும் அங்ஙனமே போய்ச்சேர்ந்தனன். சிவபிரானும்புன்னைவனத்திலிருக்கிறசங்கரலிங்கத்துள்ளேபுகுந்தனர்.

அந்தக் கன்மாடன் முன்னொரு பிறப்பிலே யிடையனாயிருந்து சிவனடியாருக் கேவல்செய்துகொண்டிருந்ததனாலே புன்னைவனத்தில் விறகுவிற்கும்பொருட்டு வந்த இடத்திற் பசியால் வாடி நாகசுனைத்தீர்த்தந் தெளிக்கப்பெற்றுத் தன்னுடலைவிட்டுப் பிரிந்து கயிலாசபதவி யடைந்தனன். அறியாதவனாகி யொருதினம் புன்னைவனத்தில் பட்டினியேயிருந்தவன் உயர்ந்த மோக்ஷம் பெறுவானென்றால் அறிவாற் புன்னைவனத்தின் பெருமையைத்தெரிந்து மனமகிழ்ந்திருக்கப்பெற்றவர் அடையும்பலன் நம்போலியர் பேசுந் தன்மையுடையதன்று. தாமரை மலரிலிருக்கும் பிரமதேவருக்கு நிகரான வேதவியாசமுனிவர் எனக்குப் பூருவகாலத்திற் சொன்னபடியே நைமிசாரணிய முனிவர்களே யுங்களுக்குச் சொல்லினேன்.

இந்தப் புராணத்தைப் படிப்பவரும் ஆசையாகக் கேட்பவரும் பொறாமைக்குணமில்லாமற் பிறருக்குப் போதிப்பவரும் கேட்டு மனமுருகுபவரும் அன்பினால் எழுதினவரும் எழுதிவைத்துப் பூசிப்பவரும் நினைத்த நினைத்த பலன்களையடைந்து சிவபிரான் றிருவடிக்கன்புடையராவர். இப்புராணத்தை யெழுதி, அறிவான் முதிர்ந்த பிராமணருக்குத் தானஞ்செய்தவர் அசுவமேதஞ்செய்த பிரயோசனத்தைப் பெறுவர். வராரசை நாயகராகிய சங்கரேசர் சரிதமாகிய இப்புராணங்கேட்போர் புராணிகர்க்குப் பொன்னும் வஸ்திரமுங் கொடுக்கவேண்டும்" என்று பெரிய தவத்தையுடையசூத முனிவ ரருளிச்செய்தனர். திரிலோகங்களும்வாழ்க. நான்கு வேதங்களும் வாழ்க. அவ்வேத பாராயணஞ்செய்யும் பிராமணர் வாழ்க. இப்புராணம் படிப்போருங் கேட்போரும் நீங்காத திரவிய சம்பன்னராயிருந்து மனமகிழ்ச்சியுடன் வாழ்க.

சங்கரேசர் திருவடிவாழ்க.

சங்கரநாராயணசாமிகோயிற்புராண முற்றிற்று.

---

# பரிசோதனா பத்திரம்.



| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 2 | 26 | வா | சீ |
| 5 | 25 | கல்வி | கல்வி |
| 20 | 4 | யடுவது | யாடுவது |
| ,, | 18 | தாடகம் | தடாகம் |
| 21 | 2 | நாடு | ம் |
| 25 | 22 | சொல் | என்றுசொல் |
| 27 | 12 | நெய்தரி | நெய்தனி |
| ,, | 20 | பொருந்து | பொருந்தும் |
| 41 | 2 | கொணாந | கொணர்ந் |
| 42 | 10 | பணிபுந் | பணிபும் |
| 45 | 13 | தல்வ | தல்வந் |
| 50 | 33 | டயை | டைய |
| 57 | 4 | வெபபாற் | வெப்பாற் |
| 67 | 15 | லெண்னி | லெண்ணி |
| 69 | 19 | நதிகளுள் | நதிகளின் |
| 91 | 14 | துபபு | துப்பு |
| 94 | 5 | யனககு | யுனக்கு |
| 95 | 29 | திருவுரு | திருவுரு |
| 97 | 5 | றாற்றி | ஹாற்றி |
| 106 | 27 | குறை | குரை |
| 116 | 12 | மனி | மணி |



